உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# கும்பாபிடேக தத்துவம்





தேவகோட்டை

சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் அவர்கள்

எழுதியது.



வெளியீடு :

சிவாகம சித்தாந்த பரிபாலன

சங்கம்,

தேவகோட்டை.

1971

30-1

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# கும்பாபிடேக தத்துவம்



தேவகோட்டை
சிவஸ்ரீ தத்புருஷ தேசிகர் அவர்கள்
எழுதியது.



வெளியீடு :

சிவாகம சித்தாந்த பரிபாலன
சங்கம்,

தேவகோட்டை.

1971

30-1

உ
சிவமயம்
பாலருவாயர் துணை.

# கும்பாபிடேக தத்துவம்.

பரங்கருணைத் தடங்கடலாகிய சிவபெருமான் தம்மை வழிபடும் உயிர்களுக்கு உய்தியை வழங்கியருளும் பொருட்டுக் குருலிங்க சங்கமங்களை நிலைக்களங்களாகக் கொண்டு வீற்றிருப்பார். உய்யும் நெறியைக்காட்டி உண்மையை உணர்த்தும் ஞானசிரியர், "குரு". திருக்கோயில்களில் சிவாகம முறைப்படி பிரதிட்டை செய்யப் பெற்ற திருவுருவம் "இலிங்கம்", சிவபெருமானிடத்து இடையருத அன்பு கொண்டு அவரருளிய சிவாகம நெறிவழியொழுகும் மெய்யன்பர்கள் "சங்கமர்கள்". குருலிங்கசங்கமங்களாகிய இந்த மூன்று இடங்களிலிருந்தன்றிச் சிவபெருமானது திருவருள் வேறு எந்த இடத்திலிருந்தும் வெளிப்படுவதில்லை. "தாபர சங்கமங்கள் என்றிரண் டுருவில் நின்று, மாபரன் பூசை கொண்டு மன்னுயிர்க் கருளை வைப்பன்" என்பது சிவஞான சித்தியார். இங்கு நிலையாயிருக்கிற இலிங்கத்தைத் "தாபர" மென்றும் இயங்குபவர்களாகிய குரு சங்கமர்களைச் "சங்கமங்கள்" என்றும் ஆசிரியர் அருணந்தி சிவம் குறித்தருளினர்.

திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் திருவுருவத்தைச் சிவனெனவே காண்பவர்க்குச் சிவபெருமான் அத்திருவுருவத்தையே நிலைக்களமாகக் கொண்டு வீற்றிருந்து அற்றம் நோக்கி அருள் வழங்குவார். "திருக்கோயில் உள்ளிருக்கும் திரு

மேனி தன்னைச் சிவனெனவே கண்டவர்க்குச் சிவ னுறைவன் அங்கே'' என்ற சிவஞான சித்தித் திரு விருத்தத்தால் இதனை அறியலாம்.'' தேசிகர் தம்மைச் சிவநேசர் தம்மையும், ஈசனெனவே மனத்துள் எண்'' என்பது சைவசமயநெறி, சரியையும் கிரியையும் யோகமுமாகிய தவ நெறியில் வழுவாதொழுகி, உண்மை ஞானம் கைவரப் பெற்ற ஞானசிரியரிடத்தி லும் திருநீறு, உருத்திராக்கம் பூண்டு ஸ்ரீ பஞ்சாட்சர சிந்தனையுடன் திருவருட் குறிப்பேயுடையராய் வாழும் சிவனடியார்களிடத்திலும் சிவத்துவ விளக்கம் இடை யீடின்றி நிலைபெற்றிருக்குமாதலால் அவர்களைச் சிவ மேயாகக் காணுதலும் வழிபடுதலும் சைவர்களால் போற்றி மேற்கொள்ளப் பெற்றன.

மாயா காரியப் பொருள்களாகிய கருங்கல் முதலியவற்றாலும் தாமிரம் ஆதியவற்றாலும் மனிதர் களால் ஆக்கப் பெற்ற திருவுருவங்களே பெரும் பான்மையாகத் திருக்கோயில்களில் பிரதிட்டை செய்யப்பெற்றும் வழிபடப்பெற்றும் வருகின்றன. நம் போன்ற சிற்றறிவும் சிறு தொழிலுமுள்ள மனிதர்களால் ஆக்கப்பெற்றதும் சடப்பொருள்களை மூலப்பொருள் களாகக் கொண்டதுமான உருவத்தில் பேரறிவும் பேராற்றலும் படைத்த கடவுள் எவ்வாறு வீற்றிருந் தருளுகிறாரென்பது நாம் அறிந்துகொள்ள வேண்டிய வற்றுள் தலையான ஒன்றாகும்.

### கடவுள் ஒருவர் உண்டா?

காணப்படுகின்ற இவ்வுலகம் மண், நீர், நெருப்பு, காற்று, வெளி ஆகிய ஐம் பெரும் பூதங் களால் ஆகியது. இப்பூதங்கள் அறிவற்ற சடப் பொருள்கள். ஆதலால் அவைகள் ஒன்றையொன்

றறிந்து சேரும் ஆற்றல் உடையனவல்ல. இவற்றை ஒரு காலத்திற்சேர்த்து உலகத்தைப் படைத்தும், பிறிதொரு காலத்திற் பிரித்து உலகத்தை ஒடுக்கியும் வருபவர் ஒருவர் வேண்டப்பெறும். அவரே கட்புலனுக்கு அப்பாற்பட்டிருக்கிற கடவுள்.

நமது உடம்பில் உயிர் இருக்கிறது. உடம்பு அறிவற்றது. அது உயிரை அறிந்து கூடமுடியாது. உயிர் உட்கூடினுலன்றி உடம்பு எதையும் உணருவதில்லை. உடல் அறிவித்தால் அறியாது. உயிர் அறிவித்தால் அறியும். ஆனுல் அவ்வுயிர் எதையும் தானுக அறிவதில்லை. அறிவித்தால் மட்டும் அறிகின்ற உயிர் தானுக உடலை அறிந்து அதனேடு கூட வழியில்லை. இவ்வாறு தம்மில் தாமே ஒன்று கூடுகின்ற ஆற்றல் இல்லாத உடலும் உயிருமாகிய இரண்டும் ஒன்று கூடி இருப்பது கண் கூடு. இவைகளைக் கூட்டி வைத்தவர் ஒருவர் இவற்றிற்கு அப்பாற்பட்டவராக இருத்தல் வேண்டும். அவரே கடவுள் என வழங்கப் பெறுகிருர்.

உலோகாயதர் என்று சொல்லப்பெறுகிற "நிரீச்சுர வாதிகள்" கடவுள் இல்லை என்று கூறுவாராயினும், உயிராற்றலுக்கு அப்பாற்பட்ட நிகழ்ச்சிகளை இயற்கை என்று சொல்லிக்கடவுளுக்கு இயற்கை என்னும் பெயர் வழங்கிக் கடவுளுண்மையை ஏற்றுக் கொள்பவராகவே இருக்கிருர்கள்.

## கடவுள் வழிபாடு வேண்டுமா?

உடம்பு கொண்டு உலகத்தில் பிறந்திருக்கின்ற உயிர்கள் அனைத்தும் வாழ்க்கையில் பலவகையான துன்பங்களை அடைந்து கொண்டேயிருக்கின்றன. செல்வம், கல்வி, செல்வாக்கு, உடல்வலி

முதலிய எவற்ருலும் குறைவின்றி யிருப்பவர்களுக்குங் கூடத் துன்பம் நீங்கியபாடில்லை. அனைவரையும் அல்லற்படுத்தி அலைக்கின்ற இத்துன்பம் எதனுல் வருகின்றது? அறிவுடைய எவரும் அதனை வேண்டு மென்று தேடியடைந்து அநுபவியார். ஆனுல் அத்துன்பம் யாரையும் விடாது, எல்லோரையும் தேடியடைந்து அநுபவிக்கும்படி செய்து வருகிறது. இதற்குக் காரணம் என்ன?

உயிர்கள் அநாதிக்காலத்திலேயே ஆணவ மலத் தொடர்பு கொண்டவை. செம்பிற் களிம்பு போல அந்த மலம், உயிர்கள் என்று உண்டோ; அன்றே அவற்றுடன் நீக்கமின்றி உள்ளதாகி அவற்றின் அறிவு இச்சை செயல்களை மறைத்துத் தடைப்படுத்தியது. அதனுல் உயிர்கள் அறிவிருந்தும் இல்லாதனபோல மூடமாய் கிடந்தன. அருட்கட லாகிய சிவபெருமான் உயிர்களிடத்து வைத்த பெருங் கருணையால் அவற்றின் கட்டையொழித்து அறிவு இச்சை செயல்களை விளக்கிப் பேரின்பத்தை வழங்கத் திருவுளம் கொண்டு தமது அருட்சத்தியால் உலகத் தையும் உடம்பையும் அவைகளுக்குப் படைத்துக் கொடுத்தார். உடலுலங்களைப் பொருந்திய உயிர்கள் துன்பத்திலிருந்து நீங்கிப் பேரின்பம் பெறுவதற்குரிய ஒழுகலாறுகளை வேத சிவாகமமாதிய அருள் நூல் களின் மூலம் நமக்கு அவர் அறிவித்தருளினுர்.

யசுர் வேத சாரமாக விளங்குகின்ற அப்பர் சுவாமிகள் தேவாரத்திலுள்ள திருவங்கமாலையில் மானிடயாக்கையிலுள்ள அகப்புற உறுப்புக்கள் அனைத்தும் சிவ வழிபாட்டிற்கே உரியன என்று தெளி வுறுத்தப் பெறுகின்றது. "சிந்தனை நின் தனக்காக்கி

நாயினேன் தன் கண்ணிணை நின் திருப்பாதப் போதுக் காக்கி, வந்தனையும் அம்மலர்கே ஆக்கி வாக்குன் மணி வார்த்தைக்காக்கி'' என்பது திருவாசகம். ஒரு உயிர், புல் முதலிய எல்லாப்பிறப்புக்களிலும் பிறந்து இளைத்த பின்னரே மனித உடம்பை அடைகிறது. அங்ஙனம் அரிதிற் பெற்ற மனிதப் பிறப்பும், மனித உடம்பிலுள்ள உறுப்புக்களும்கடவுள் வழிபாட்டுக்குப் பயன்படாது போகுமாஞல், உலகு உடல்களைத் தந்து உதவி புரிந்த தலைவனுக்கு, அது நன்றி கொன்ற கேடாக வந்து முடியும். ''எந்நன்றி கொன்ருர்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை, செய்நன்றி கொன்ற மகற்கு''என்பது பொய்யாமொழி. இந்தத் திருக்குறளை எடுத்து உலகியல் பற்றிய அளவில் வாய் கூசாது முழக்கிக்கொண்டிருக்கிற பலர், இறையியல் பற்றிய அளவில் நன்றி கொல்லும் பாதகத்தை விடாதுசெய்து கொண்டிருப்பது அந்தோ! என்ன பரிதாபம்! நிற்க.

அறிவுள்ள உயிர் அறிவற்ற சடப்பொருள் போல அசைவற்றுக் கிடந்த நிலையிலிருந்து மாற்றம் பெற்றுச் செயலாற்றும் திறமுடையதாகும்படி வைத்த சிவபெருமானையும், எள்ளளவும் துன்பம் கலவாத பேரின்பம் பெறுவதற்கு வழி கூறும் வேத சிவாகம மாதிய அருள் நூல்களையும், அவ்வருள் நூல்களில் நல்லின்பம் பெறுவதற்குக் கூறும் நெறிமுறைகளையும் புறக்கணித்து விட்டு, மனம் போன போக்கில் வாழுவது அறிவுடைமையாகுமா? எனவே, கடவுளை அவர் அருளிய நெறிமுறையில் வழிபாடு செய்ய வேண்டுவது,மிகமிக இன்றியமையாததாகும். கடவுள் வழிபாடு ஒன்றினுலேயே. துன்ப நீக்கமும் இன்ப ஆக்கமுமாகிய இருவகைப் பயன்களும்கிட்டுமாதலால் அதையின்றி மக்களுக்கு நற்கதி வழங்குவது வேறென் றில்லை என்பதை உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்.

### மூவகை வழிபாடு

சிவ வழிபாட்டுக்குரிய கரணங்கள் மனம், மொழி, மெய், என்னும் மூன்றும் ஆகும். அது பற்றி வழிபாடும் சிந்தித்தல், துதித்தல், வந்தித்தல் என மூவகைப்பட்டு நிகழும்.

### மன வழிபாடு

துன்பத்தை விளைவிப்பனவாகிய நல்வினை, தீவினைகள் மனம் பொறி வழிப்பட்டுச் செல்வதால் உண்டாவன. பிறப்பு இறப்புக்குக் காரணமாகிய வினைகள் கூடாதிருப்பதற்கு, மனதை அருட்குறியின் பால் நிறுத்தி, வேறு நினைவுகளை ஒழித்து, இடையீடின்றிச் சிவபெருமானையே சிந்தித்திருத்தல் வேண்டும். அத்தகைய சிந்தனை கைகூடுவதென்பது எளிமையானதல்ல. பல்காலும் பயிலும் பயிற்சி முதிர்ச்சியினலேயே, அந்தப் பெரும் பேறு சித்திக்கும் ஆதலால், வாழ் நாளை வீழ் நாளாக்காது, தியான பாவனையை ஒவ்வொருவரும் மேற்கொள்ளுதல் வேண்டும்.

### மொழி வழிபாடு

மொழி வாய்மை பேசுதலுக்கும், அறம் உரைத்தலுக்கும், இனியவை கூறுதலுக்கும் பயன் படுவது போலப் பொய்மை பேசுதலுக்கும் தீமை கூறுதலுக்கும் இன்னுதவை மொழிதலுக்கும் கூடப் பயன்பட முடியும். முன்னர்க் கூறிய மூன்று வகை மொழிகளும் நன்மை தருவனவேயாயினும் அவைகளும் பின்னர்க் கூறிய மூன்று வகை மொழிகளைப் போலத் தீவினைகளாக ஆகாது, நல்வினைகளாக ஆகிப் பிறப்பு இறப்புக்களைத் தருவனவேயாகும் நல்வினை பொன்விலங்கும் தீவினை இருப்பு விலங்கும் போலப் பிறப்புக்கு வித்தாவதைப் பரிமேலழகர்

குறிப்புடன் ''இருள் சேர் இருவினை'' என்ற திருவள்ளுவர் திருவாக்கைப் படித்துத் தெரிந்து கொள்ளுதல் வேண்டும். பிறப்பிறப்புக்கள் நீங்கிப் பேரின்பம் பெறுவதற்கு. அருள்நூல்களை ஓதுவதும், ஆசாரியர் உணர்த்திய முறையில் அஞ்செழுத்து முதலிய மந்திரங்களைக் கணித்தலும் வேண்டும்.

### மெய் வழிபாடு

உயிர்களின் பொருட்டுச் செய்கின்ற உதவிகளும், மகப்பேறு செல்வப்பேறு முதலாகத் தனக்கு வேண்டிய பேறுகளின் பொருட்டுச் செய்கின்ற வழிபாடுகளுமாதியன, நல்லனவேயாயினும் அவற்ருல் பிறப்பிறப்புக்கள் மேலும்மேலும் உண்டாவதையன்றி ஒழியுமாறில்லை. இச்செயல்களுக்கு மாறுபட்டனவாகிய தீச்செயல்கள், பிறப்பிறப்புக்களை உண்டாக்குவன வென்பது சொல்லாமலே விளங்குவது. திருநந்தனவனம், திருக்குளம் திருக்கோயில் ஆகிய திருப்பணிகள் செய்தலும், சிவாலயத்தொண்டு சிவபூசையாதியன புரிதலுமே உயிர்களின் உய்திக்கு வழி செய்வனவாகும்.

### வழிபாட்டுக்குத் திருக்கோயில் வேண்டுமா?

உயிர்கள் வினைவயப்பட்டு உலகியலில் அழுந்தி, மனைவி மக்கள் செல்வம் முதலியவற்றில் மோகம் கொண்டு இன்ப துன்பங்களை இடையீடின்றி நுகர்ந்து கொண்டிருக்கின்றன. எங்கும் நிறைந்திருக்கிற கடவுளை எந்த இடத்திலிருந்து கொண்டும் வழிபடலாமென்ருல், மற்ற எல்லா இடங்களும் இன்ப துன்பங்களுக்கு நிலைக்களங்களாகவேயிருத்தலின், அவ்விடங்களில் செய்யும் வழிபாடு நிலைபெருது தடைபடுவது உறுதி.

அதனுல் ஒரு வரம்புக்குட்பட்டு உலகியலை மறந்து கடவுளை வழிபடுவதற்கு ஒரு பொது இடம் இன்றி யமையாது வேண்டப்படுவதாகும். எல்லா நாட்டி னரும் எல்லாச் சமயத்தினரும், எல்லா வகுப்பினரும் தத்தம் பொது வழிபாட்டுக்கென இடங்களை அமைத் துக் கொண்டிருப்பது, எங்கும் காணப்பெறுவதாகும். அங்ஙனம் அமைந்த இடங்களே திருக்கோயில்கள். கடவுள் எல்லா இடங்களிலும் நீக்கமற நிறைந்திருக் கிருராயினும், திருக்கோயில்களில் மந்திர பூர்வமாகப் பிரதிட்டை செய்யப் பெற்ற திருவுருவங்களில் அவர் வெளிப்பட்டுத் தோன்றி அருள் புரிகின்ருராதலால், ஆலய வழிபாடு அனைவருக்கும் வேண்டப் பெறு வதேயாகும்.

### சிவாலயச் சிறப்பு

எல்லாச் சமயத்தாரும் தத்தம் கடவுளரை வழிபடத் தங்கள் தங்கள் மனதுக் கியைந்தபடி கோயில்களை அமைத்துக்கொண்டிருக்கிருர்கள். சிவா லயங்கள் அவ்வாறு அமைக்கப்பட்டவையல்ல. சைவ சமயத்தின் உண்மைகளையும் தத்துவங்களையும் தமது உறுப்புக்களால் உணர்த்திக் கொண்டிருப்பன சிவாலயங்கள். புறத்தேயுள்ள அண்டங்களின் சொரு பமாகவும் அகத்தேயுள்ள பிண்டங்களின் சொருப மாகவும் சிவாலயம் அமைந்துள்ளது.

அண்டத்திலுள்ள சுத்தமாயை சிவாலயத்தி லுள்ள கர்ப்பக்கிரகம். அசுத்தமாயை அர்த்த மண்டபம், பிரகிருதிமாயை மகாமண்டபம். அண்ட மாயையில் உள்ள சாந்தியதீதை, சாந்தி, வித்தை, பிரதிட்டை, நிவர்த்தி ஆகிய ஐந்து கலைகளும், சிவாலயத்தில் உள்ள ஐந்து பிராகாரங்கள்.

பிண்டமாகிய நமது உடம்பில் உள்ள தலை, கழுத்து, மார்பு, தொப்புள், பாதம் என்னும் ஐந்து பிரிவுகளைப் போலச் சிவாலயத்தில் கர்ப்பக்கிரகம் அர்த்தமண்டபம், மகாமண்டபம், யாகசாலை, கோபுரம் என்னும் ஐந்து பிரிவுகள் உள்ளன. சிவாலய அமைப்பு உடலுறுப்புக்களைப் போன்ற பகுப்புக்களுடன் கூடியதாகவோ அல்லது இருதய உறுப்புக்களைப் போன்ற பகுப்புக்களுடன் கூடிதாகவோ இருக்கும். முன்னதைச் "சரீரப் பிரத்தாரத் திருக்கோயில்" என்றும் பின்னதை "இருதயப் பிரத்தாரத் திருக்கோயில்" என்றும் சொல்லுவர்.

**சிவாலயத்தில் எல்லாக் கடவுளரும் உளர்.**

கடவுள் சிவபெருமானுகிய ஒருவரே. அவர் அறக்கருணையாலும் மறக்கருணையாலும் உயிர்களுக்கு அநுக்கிரகம் செய்யும் பொருட்டு எடுத்துக்கொண்ட அருள் வடிவங்கள் சந்திரசேகரர், சோமாஸ்கந்தர் முதலாகப் பலஉள்ளன. சிவபெருமானது ஆணையைப் பெற்று உயிர்களுக்கு நிக்கிரக அநுக்கிரகங்களைச் செய்கின்ற திருமால் நான்முகன் முதலிய தேவர்களும் உள்ளனர். முன்னே சொல்லிய கடவுளரின் திருவுருவங்களும் பின்னே சொல்லிய தேவர்களின் திருவுருவங்களும் சிவாலயத்தில் வைத்துப் பூசிக்கப் பெறுவதால் சிவாலயம் அனைத்துத் தெய்வங்களின் சொரூபமாக அமைந்திருக்கிறது. மேலும் உயிர்களுக்கு அருள்புரிவதற்குச் சிவபெருமான் அருவம், அருவுருவம், உருவம் ஆகிய மூவகைத் திருமேனிகளையும்கொள்ளுவார். சிவாலயத்தின் பள்ளியறையிலுள்ள கண்ணுடியில் அருவ வடிவமும் சிவலிங்கத்தில் அருவுருவ வடிவமும் சந்திரசேகரர், விநாயகர் முதலிய திருவுருவங்களில் உருவ வடிவமும், அமைந்துள்ளன.

இன்னும் சிவாலயத்திலுள்ள சிவலிங்கம், பதி, இடப தேவர், பசு, பலிபீடம் பாசம் என்பதும் அறியத்தக்க தாகும்.

இங்ஙனமாகச் சிவாலயத்தில் உள்ள உண்மைகள் விரிக்கிற் பெருகும். உண்மை நூல்களை ஓதியுணர்ந்த ஆன்ேறார்களிடம் இவற்றைக் கேட்டுத் தெளிந்து அமைதி பெறுவது அறிவுடைமையாகும்.

## பொருளாற்றலும் அருளாற்றலும்.

காணப் பெறுகின்ற எல்லாப் பொருள்களிலும் அவ்வவற்றுக்கெனத் தனித்தனியே ஆற்றல்கள் அமைந்திருக்கின்றன. இதைப் ''பௌதிக ஆற்றல்'' என்று சொல்லுவோம். இதைப் போலவே எல்லாப் பொருள்களிடத்திலும் எதனுலும் அளந்தறிய முடியாத தெய்வீக ஆற்றலும் நிறைந்திருக்கிறது. அதனுலேயே அறிவற்ற பௌதீக ஆற்றல் அறிவுள்ள மனித ஆற்றலுக்கும் அப்பாற் பட்டுச் செயற்பட்டு விடுகிறது. பொருளாற்றல் பொருள்களில் தங்கி யிருந்து வெளிப்படுவது போல அருளாற்றல் அருள் நிறைந்த சிவஞானியரது உள்ளம் உடம்பு செயல் முதலியவற்றிலும் அவர் கைக்கொள்ளும் தருப்பை மாவிலை முதலியவற்றிலுமாக எளிதில் வெளிப்பட்டு அனைவருக்கும் பயனை வழங்குகிறது.

## நினைவு, சொல், செயலுக்கு ஆற்றல் உண்டா?

நாம் எண்ணுகிற எண்ணம், பேசுகிற பேச்சு, செய்கிற செயல் ஆகிய மூன்றுக்கும் ஆற்றல் உண்டு. ஒருவன் தனது நினைவு வலிமையால் பிறிதொருவனை வசப்படுத்துவது உலகியலிற் காணப்பெறுகின்றது. இதனை ''மனேவசியம்'' என்று சொல்லுவார்கள். அந்நிய நாட்டார் கூறுகின்ற ''ஹிப்னுட்டிஸம், மெஸ் மெரிஸம்'' என்பன, இந்தவகையைச் சேர்ந்தனவே.

நமது நாட்டிலுள்ள சித்திபெற்ற மந்திரவாதிகள் தமது மன வலிமையினுலேயே பயனை வழங்கிக் கொண்டிருக்கிறுர்கள். ஆமைகளின் இனம், அவை இட்ட முட்டைகளைக் குஞ்சுகளாக ஆக்குவதற்கு நினைப்பு ஒன்றையே பயன்படுத்துகின்றன வென்பதை அறிந்தவர்களுக்கு உயிர்களின் எண்ணமே தொழிற்பாட்டுக்குக் கருவியாயிருப்பதுண்டென்பது நன்கு விளங்கும்.

"சொல்" என்பது எழுத்துக்களால் ஆக்கப்பெற்றுப் பொருளை அறிவிக்கும் ஓசை. அச்சொல் ஒலி வடிவிலும் வரிவடிவிலும் அமைந்திருக்கும். இவ்விருவகைச் சொற்களும் ஆற்றலுடையனவே. ஒருவன் பிறிதொருவனை ஒரு தொழிலைச் செய்யும்படி ஏவும் முகமாக ஒன்றைச் சொல்வானுனுல், அச் சொல்லைக் கேட்டவன் ஏவியவனது குறிப்பின்படி அத்தொழிலைச் செய்வது கண்கூடு. இது ஒலி வடிவில் உள்ள சொல்லின் ஆற்றலைப் புலப்படுத்தும். பெரிய மனிதர் ஒருவரின் தனியறை வாயிலில் "அநுமதி பெற்று உள்ளே வருக" என்று எழுதிய அட்டை தொங்கவிடப் பட்டிருந்தால் விரைந்து உள்ளே செல்ல முயன்றவன் அவ்வட்டையைப் பார்த்ததும் தடைப்பட்டு நின்று விடுவான். இது வரி வடிவில் உள்ள சொல்லின் ஆற்றலைப் புலப் படுத்துவது. பொதுவாக ஒலி வடிவிலும் வரி வடிவிலும் உள்ள சொற்களுக்கு ஆற்றலுண்டு என்பதை இவற்ருல் அறியலாமாயினும், சொல்வோரது தகுதிக்குத்தகவே விரைந்த பயன், தாழ்த்த பயன், நிறைந்த பயன், குறைந்த பயன் ஆகியவற்றைச் சொற்கள் கொண்டிருக்கின்றன என்பதும் உணர்ந்து கொள்ள வேண்டியதாகும்.

இனி நமது செயலுக்கு ஆற்றலுண்டு என்பது கண்கூடாகக் காணப்பெறுவதாகும். நன்மை செய்தால் நன்மை விளைவதும் தீமை செய்தால் தீமை விளைவதும் நாமறிந்தனவே. ஒருவன் தனது எண்ணத்தை வாயினுல் சொல்லாமலும் எழுத்தால் எழுதாமலும் உடலுறுப்புக்களின் அசைவினுலேயே வெளிப்படுத்திவிட முடியும். ஊமையர்களது குறிப்பை நோக்கினுல் இது நன்கு விளங்கும்.

இதுகாறும் கூறியவற்றுல் நமது நினைவு சொல் செயல் ஆகிய மூன்றுக்கும் ஆற்றலுண்டு என்பது தெளியப்பெறும்.

சைவக்கிரியைகள் ஆற்றல் உள்ளனவா?

சைவ சமயத்தில் சொல்லப் பெறுகிற கிரியைகள் எல்லாவற்றிலும் மேலே கூறிய நினைவாற்றல், சொல்லாற்றல், செயலாற்றல் என்ற மூவகை ஆற்றல்களும் நிரம்பியிருக்கின்றன. மந்திரம், கிரியை, பாவனை என்ற மூன்றினுலும் நிறைவு பெறுகின்ற இச் செயல்களில் மந்திரத்தால் சொல்லாற்றலும், கிரியையால் செயலாற்றலும் பாவனையால் நினைவாற்றலும் அமைந்துவிடுகின்றன. மந்திரங்கள் கணிக்கப்பெற்று ஒலி வடிவிலும் யந்திரங்களில் எழுதப்பெற்று வரி வடிவிலும் ஆற்றலை வழங்குகின்றன.

சைவக் கிரியைகளில் ''நிரீட்சணம்'' என்பது ஒன்று. இது முன்னிலையில் உள்ள ஒரு பொருள் தூய்மை அடைதற்பொருட்டுச் செய்யப் பெறுவது. இந்தக் கிரியை செய்யும் போது மந்திர மொன்றை ஓதுதலும், குறித்த பொருளைக் கண்ணினுற் பார்த்தலும் அப்பொருள் தூய்மை அடைதல் வேண்டு மென்று நினைத்தலுமாகிய மூன்றும் ஒருங்கே நிகழும்.

அங்ஙனம் மூன்றும் ஒருங்கே நிகழாத போது, இக் கிரியையால் ஏதும் பயனில்லை யென்று நமது நூல்கள் கூறுகின்றன. ஆகவே, மந்திரம் கிரியை பாவனை ஆகிய மூன்றும் பொருந்தச் செய்கின்ற சைவக் கிரியைகள், பேராற்றலுடையனவாய்ப் பயன் தருகின்றன வென்பதை, உணர்ந்து கொள்ளுதல் வேண்டும்.

பிம்பங்களும் கும்பங்களும்

சைவர்களல்லாத மற்றைச் சமயத்தார் வைத்து வணங்கும் உருவங்களில் அவரவர்களின் சமயக் கொள்கைகளை உணர்த்தும் தத்துவங்கள் எவையும் இல்லை, அவ்வுருவங்கள் தெய்வீக மந்திரங்களால் புனிதமடைந்தனவுமல்ல. சைவ சமயிகள் வணங்குகின்ற திருவுருவங்கள், சமய உண்மைகளையும் தத்துவங்களையும் தமது தோற்றத்தாலேயே உணர்த்திக் கொண்டிருப்பதுடன், மேலான மந்திர சம்ஸ்காரங்களால் அருள் வழங்குவதில் முன்னிற்பனவாகவும் உள்ளன.

கடவுளை ஒப்புயர் வற்றவரென்றும், என்றும் நிலையாயிருப்பவரென்றும், எங்கும் நிறைந்தவரென்றும், பேரருளுடையவரென்றும், இன்ப அன்பு வடிவினரென்றும், பேராற்றலுடையவரென்றும், அஞ்ஞானத்தை அடக்குபவரென்றும், இவை முதலான இன்னும் பல சிறப்புக்களை உடையவரென்றும் சைவசமயம் சொல்லும். இவ்வுண்மைத் தத்துவங்களைச் சிவபெருமானது மகேசுவர மூர்த்தங்களில் தெளிவு பெற அறிந்து கொள்ளலாம்.

சிவபெருமானுக்குரிய அருவம் அருவுருவம், உருவம் ஆகிய மூவகைவடிவ வழிபாடுகளும் சிவாலயங்களில் ஒவ்வொருநாளும் நிகழ்ந்து கொண்டிருக்

கின்றன. மந்திரமயமாக அருவ வழிபாடும், கும்பங் களிலும் குண்டங்களிலும் அருவுருவ வழிபாடும் பிம் பங்களில் உருவ வழிபாடும் நடைபெறும்.

அருவுருவ வடிவாயிருக்கிற சிவலிங்கமும் கும் பமும் தம்முள் ஒற்றுமையுடையன. சிவலிங்கத்தைப் போலவே கும்பமும் மந்திரம், பதம், வன்னம், புவ னம் தத்துவம், கலை என்னும் ஆறு அத்துவாக்களின் வடிவமாகவும் சிவசத்தி சொரூபமாகவும் இருப்பது. சிவலிங்கத்திற் போலவே கும்பத்திலும் அடியில் ஆன்மதத்துவம் நடுவில் வித்தியா தத்துவம் முடியில் சிவதத்துவம் ஆகிய மூன்று தத்துவங்களும் பூசிக்கப் பெறுகின்றன. சிவலிங்கத்தில் எல்லாச் சிவசத்திகளும் அடங்கியிருப்பது போலக் கும்பத்துள் உள்ள நவரத் தினங்களில் மனோன்மனி முதலான ஒன்பது சத்திக ளும், உட் கூர்ச்சத்தின் அடி நடு முடிகளில் இச்சா ஞானக்கிரியா சத்திகளும் கும்பத்தில் சுற்றியிருக்கும் நூலிலுள்ள மூவிழைகளில் வாணி, திரு, உமையா கிய சத்திகளும் உள்ளனர்.

கும்பத்துள் வைக்கப்பெறும் சுவர்ணபுட்பம், சதாசிவமூர்த்தி. வெளிக்கூர்ச்சத்தின் அடி, நடு, முடி பிரம, விட்டுணு உருத்திரர்கள். கும்பத்தின் மேலுள்ள தேங்காய், மகேசுவர மூர்த்தி. மாவிலை கங்கை. கும் பத்தின் கீழே பரப்பப் பெறும் ஏழுதானியங்களில் நெல், இடபதேவர். அரிசி குமரன். உளுந்து, அக் கினி, கோதுமை, சந்திரன். துவரை, குபேரன் ,பயறு வருணன். எள், தேவி. இவ்வாறு கும்பத்தில் சிவலிங் கத்தைப் போல எல்லாத் தேவரும் இருப்பர்.

### யாக சாலை

''யாகசாலா''என்பது, ''சுகத்தின் பொருட்டு ஒடுங்கு மிடத்தில் ஞானயாகத்தால் செல்லுவது''

என்னும் பொருளை உடையது. யாகசாலைகள் ருத்திர சூத்திரம், விட்டுணு சூத்திரம், பிரம சூத்திரம், கண சூத்திரம், கலா சூத்திரம், மனு சூத்திரம், ரவி சூத்திரம், பங்கதி சூத்திரம், என்னும் எண் வகை முறைகளில் ஒன்றில் அமைக்கப் பெறும்.

இவை முறையே 64 அல்லது 44, 34, 24, 18, 16, 18, 12, 10, சூத்திரங்களாகும் உருத்திர சூத்திரத்திற்கு 33, விட்டுணு சூத்திரத்திரத்திற்கு 25, பிரம சூத்திரத்திற்கு, 17, கண, கலா, மனு, சூத்திரங் களுக்கு 9 ரவி சூத்திரத்திற்கு 5. பங்கதி சூத்திரத் திற்கு 1 என்ற எண்ணிக்கைகளில் குண்டங்களை அமைக்க வேண்டும்.

குண்டங்கள் நாற்கோணம், அரசிலை, அரைச் சந்திரன், முக்கோணம், தாமரை, வட்டம், அறு கோணம், எண்கோணம் ஆகிய வடிவங்களில் அமைக் கப்பெறும். இக்குண்டங்கள் மண் முதல் நாதமீருகச் சொல்லப் பெறுகின்ற 36 தத்துவங்களின் சொரூப மானவை. இக்குண்டங்களில் சிவபெருமானது அட்ட மூர்த்திகளாகிய க்ஷமாமூர்த்தி, மகாதேவர், சர்வர், ஈசானர், பசுபதி, உருத்திரர், உக்கிரர், பீமர், என் பவர்களும் இவர்களுக்கு மூர்த்திமான்களாகிய இருதய, அகோர, சிகா, கவச, சத்தியோசாத, வாமதேவ, சிரசு, பரசிவ மூர்த்திகளும் பூசிக்கப்பெறுவார்கள்.

யாகாக்கினி, வைநசுவராக்கினி சிவாக்கினி என இருவகைப்படும். வைநசுவராக்கினியை வைதி காக்கினி என்றும் சொல்லுவர். இது தேவதாத்மக பாவம் இல்லாது ஜாடராக்கினி ரூபமாயிருப்பது. சிவாக்கினி தேவதாத்மகபாவமுடையதாய்ச் சிவரூப மாயிருக்கும். லௌகிக போகங்களை மட்டும் வழங்கு

கிற கர்மயாகமும், போக மோட்சங்களை வழங்குகிற ஞானயாகமுமென, யாகம் இருவகைப்படுவதால் கர்மயாகத்தில் வைதிகாக்கினியும் ஞானயாகத்தில் சிவாக்கினியும் பூசிக்கப்பெறுகின்றன. பிரமனை அதிட்டாதாவாகக் கொண்ட வைதிகாக்கினிக்கு ஆவரணங்கள் கிடையாது. சிவபெருமானை அதிட்டாதாவாகக் கொண்ட சிவாக்கினிக்கு ஐந்து ஆவரணங்கள் உள்ளன. ஞானயாக குண்டங்களில் ஆஹவனீயம், தக்ஷிணக்கினி, காருகபத்தியம், பாலாக்கினி, யௌவனக்கினி, விருத்தாக்கினி, கேவலாக்கினி, சாமான்யாக்கினி, சிவாக்கினி என்னும் ஒன்பது அக்கினிகளும் வைத்துப் பூசிக்கப் பெறும்.

குண்டங்கள் சிரசு, இருதயம், கண்டம், நாபி, யோனி, மேல்மேகலை, நடுமேகலை, கீழ்மேகலை பரிஸ்த்ரணம் என்னும் ஒன்பது உறுப்புக்களை உடையன. இவற்றுள் முன்னே உள்ள எட்டும் சிவபெருமானது அட்ட மூர்த்த வடிவங்கள். பரிஸ்த்ரணம் என்பது, குண்டத்தைச் சுற்றிப் போடப்பெறும் தருப்பைகள்.

கும்பாபிடேகம்

சிவாலயங்களில் நிகழும் எல்லாக் கிரியைகளும் சிவாகாரமானவையாகவும் தத்துவ அடிப்படையில் அமைந்தவையாகவும் நடைபெறத், திருவருள் வெளிப்பாட்டை வேண்டிச் செய்யும் இச்சைவக் கிரியைகளில் தலையானதாக விளங்குவது கும்பாபிடேகம். சிவ சொரூபமாக அமைந்த யாகசாலையில் அந்தச் சிவமேயாகிய அக்கினியிலிருந்து எழும்புகின்ற சுவாலை, வெப்பம், புகைகளும், வேத சிவாகம ஓசைகளும் திருமுறை ஓசை, சிவனடியார்களின் தோத்திர ஓசைகளும் சிவாசாரியர்கள் மந்திரக் கிரியா பாவனைகளுடன் செய்யும் செயல்களும், மெய்யன்பர்களது மனமுருகிய பிரார்த்தனை வழிபாடுகளும்

ஒருங்கு சேர்ந்து, எங்கும் நிறைந்திருக்கிற சிவபெருமானது திருவருட் சத்தியைத் தூண்டியெழுப்பிக் கும்பத்திலும் அதனுள் இருக்கும் தண்ணீரிலும் விளங்கி நிற்கும்படி செய்கின்றன. தண்ணீர், பௌதீக மின் சாரத்தை நடத்தும் பொருள்களில் தலையான தென்பது நாமறிந்தது. அத்தண்ணீரில் தெய்வீக மின் சார ஆற்றல் விளங்குமாறு செய்து, அந்தத் தூய நீரை மந்திர சம்ஸ்காரங்களால் திருவருள் விளக்கம் பெற்றுப் பிரதிட்டை செய்யப்பெற்ற பிம்பங்களில் அபிடேகித்தலே "கும்பாபிடேகம்" ஆகும்.

## சிவாலய வழிபாட்டு முறை

காலையில் எழுந்து நீராடித், தோய்த்துலர்ந்த ஆடையணிந்து திரு நீறு பூசி உருத்திராக்கம் பூண்டு, சமய தீக்ஷிதர்கள் சைவானுட்டானம் ஸ்ரீ பஞ்சாட்சர செபமும், விசேட நிருவாண தீக்ஷிதர்கள் அவற்றுடன் ஆன்மார்த்த சிவபூசையும் முடித்துக் கொண்டு, சிவ சிந்தனையுடன் திருக்கோயிலுக்குச் செல்ல வேண்டும். திருக்கோபுரத்தைக் கண்டவுடன் இரண்டு கைகளையும் சிரசிலே குவித்து வணங்கிச் சிவநாமங்களை உச்சரித்துக் கொண்டு திருக்கோயிலினுள் நுழைந்து கொடிமரத்திற்கு முன்னல் கிழக்கு, தெற்கு நோக்கிய சந்நதிகளாயின் சுவாமிக்கு வலப்பக்கத்திலும் மேற்கு, வடக்கு நோக்கிய சந்நிதிகளாயின் சுவாமிக்கு இடப் பக்கத்திலும் நின்று ஆடவர் அட்டாங்க நமஸ்காரமும் பெண்கள் பஞ்சாங்க நமஸ்காரமும் செய்தல் வேண்டும். கொடிமரத்திற்கு முன்னன்றிக் கோயிலுக்குள் எந்த இடத்திலும் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்யக் கூடாது, அதுவும் 3, 5, 7, 9, 12 தடவைகளாகச் செய்வதன்றி 1, 2, தடவைகளாகச் செய்வது குற்றம் தலை, கையிரண்டு, செவியிரண்டு, மோவாய், புயம்

களிரண்டு என்னும் எட்டு உறுப்புக்களும் தலை, கையிரண்டு, முழந்தாளிரண்டு என்னும் ஐந்து உறுப்புக்களும் முறைப்படி நிலத்திலே பொருந்தும் படி வணங்குவது அட்டாங்க பஞ்சாங்க நமஸ்காரங்களாகும்.

முதலில் கொடிமரம், பலிபீடம், இடபதேவரை வணங்கிக் கணநாயகராகிய நந்தியம் பெருமானைத் துதித்துத் துவார பாலகரை வணங்கி அனுமதி பெற்று விநாயகரை வணங்கிக் கொண்டு சிவலிங்கப் பெருமான் திருமுன்னர்ச் சென்று இரண்டு கைகளையும் சிரசின் மேற் குவித்துத் தேவார திருவாசக மாதிய அருட்பாடல்களை ஓதி வணங்கிச் சபாநாயகர் சோமாஸ்கந்தர் தெட்சணாமூர்த்தி முதலிய மூர்த்தங்களைத் துதித்து வழிபட்டு அம்மையார், முருகப் பெருமான், பைரவமூர்த்தி, சமயாசாரியர் ஆதிய மூர்த்திகளை வணங்கி மூன்று முறை வலம் வந்து சண்டேசுரர் சந்நிதியை அடைந்து மூன்று முறை கைகளைக்கொட்டி வணங்கிச் சிவ சந்நிதிக்கு வந்து சிவலிங்கப் பெருமானைத் தெரிசித்துக் கொடி மரத்துக்கு முன்னால் மீட்டும் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து கீழே இருந்து ஸ்ரீ பஞ்சாட்சரத்தை விதிப்படி செபித்து வழிபாட்டை முடித்துக்கொள்ள வேண்டும். சிவாலயத்தில் சிவாசாரியர் தரும் திருவருட் பிரசாதமாகிய திருநீறு, குங்குமம் முதலியவைகளைப் பய பக்தியுடன் வாங்கிச் சிறிதளவும் கீழே சிந்தாமல் தரித்துக் கொள்ள வேண்டும்.

விநாயகரைத் தெரிசிக்கும் பொழுது முட்டியாகப் பிடித்த இரண்டு கைகளினாலும் நெற்றியில் மூன்று முறை கொட்டி, வலக்காதை இடக்கையினாலும், இடக்காதை வலக்கையினாலும், பிடித்துக்

கொண்டு மூன்று முறை தாழ்ந்தெழுந்து வணங்குதல் வேண்டும். சிவாலயத்தில் அம்மையார் திருக்கோயில் தனியாக இருந்தால் நான்கு தரம் முதலாக இரட்டுறும் முறையில் பிரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்தல் வேண்டும்.

சிவாலய தெரிசனம் நாடோறும் செய்யத் தக்கது. சோம வாரம் சுக்கிர வாரம், சதுர்த்தி, சஷ்டி, பிரதோஷம், திருவாதிரை, கார்த்திகை, சிவராத்திரி நவராத்திரி முதலிய புண்ணிய தினங்களில் செய்யும் வழிபாடு பெரும் பயனைத் தரும். திருவிழா, கும்பாபிடேகம் முதலிய விசேடங்களில் தெரிசித்தவர்களுக்கு வினைகள் ஒழிந்து சிவபோகம் சித்திக்கும்.

கிழக்கிலும் வடக்கிலும் கால்களை நீட்டி நமஸ்காரம் பண்ணலாகாது. அபிஷேகம், நிவேதனம் முதலியவற்றிற்காகத் திரையிட்டிருக்கும் போது வலம் வருதல், வணங்குதல் முதலியன செய்யலாகாது. சண்டேசுவரர் சந்நிதியில் கைகொட்டி வணங்குவதைத்தவிர வேறு எதுவும் செய்தல் கூடாது. பரிவார மூர்த்திகளை மட்டும் தனியே வலம் வருவது குற்றமாகும். திருக்கோயிலுக்குள் மற்ற எவரையும் வணங்குதல் கூடாது.

திருக்கோயிலில் எச்சிலுமிழ்தல், மூக்குநீர் சிந்துதல், சயனித்தல், காலை நீட்டிக்கொண்டிருத்தல், பாக்கு வெற்றிலை யுண்டல், தோளில் உத்தரீயம் இட்டுக் கொள்ளுதல், சட்டையிட்டுக் கொள்ளுதல் திருவுருவங்களைத்தொடுதல், விளையாடுதல், நிருமாலியங்களை மிதித்தல் முதலிய குற்றங்களைச் செய்பவர் மீளா நரகத்துக்கு ஆளாவர்.

சிவாலயங்களில் சிவாசாரியரால் செய்யப்

பெறும் கும்பாபிடேகம் நித்திய நைமித்திக பூசைகள் முதலியன எல்லா உயிர்களுக்கும் செய்யும் சிவதீகைஷ யாகும், சிவாலய தெரிசனம் செய்பவர்கள் அபர முத்தர்களாவார்கள். சீவன் முத்தர்களாகிய பரம ஞானியருக்கும் சிவாலய வழிபாடு இன்றியமையாதது. இம்மை மறுமை நலங்கள் எல்லாவற்றையும் எளிதில் வழங்குகின்ற சிவாலய வழிபாட்டை விதிப்படி எல்லோரும் கைக்கொண்டு இன்புறுவார்களாக.

நலமே தழைக

---



## சோடசோபசாரங்கள்

ஆசனமா வாகனம்பாத் தியாச மனுர்க் கியமும்
அபிடேகம் பரிவட்டம் அணிதருநற் கந்தம்
வாச நறு மலர்நைவேத் தியமொடுதாம் பூலம்
மணமலிந்த தூபமொடு தீபமுமா ருத
தேசுமிகும் ஆலத்தி தட்டிதிரு நீறு
சேர்ந்தசுளு கோதமாச் செப்புபதி னுறும்
ஈசனுக்காம் உபசாரம் புரிந்தவர்கள் இகத்தே
இன்பமெலாம் உறுவர்பின்சா யுச்சியமெய்
துவரே

1. ஆசனம்
2. ஆவாகனம்
3. பாத்தியம்
4. ஆசமனம்
5. அர்க்கியம்
6. அபிடேகம்
7. பரிவட்டம்
8. சந்தனுதிகள்
9. மலர்
10. நிவேதனம்
11. தாம்பூலம்
12. தூபம்
13. தீபம்
14. ஆலத்தி
15. திருநீறு
16. சுளுகோதகம்

## சிவதெரிசின மகத்துவம்

காலைதொழ அற்றைவினைக் கட்டகலும் கட்டுச்சி
வேலைதொழ இப்பிறப்பில் வெந்துயர்போம்—மாலை
யினில்
வந்து சிவன்தாளை வந்தித்தால் ஏழ்பிறப்பின்
வெந்துயரம் எல்லாம் விடும்.

திருச்சிற்றம்பலம்.

---

